'பாரின் எக்ஸ்சேஞ்ச்' மத்திய சர்க்காரில் கேட்டோம். அவர்கள் குறைவாகத்தான் கொடுத்திருக்கிறார்கள். இருந்தபோதிலும், 1963-ல் அதிகப்படியாக வாங்கி விவசாயிகளுக்குக் கொடுக்க ஏற்பாடுகள் செய்யப்படும்.

**SRI J. MATHA GOWDER :** உருளைக்கிழங்கு பயிருக்கு 'லேட் ப்ளைட்' என்ற வியாதி வருவதால், விவசாயிகள் விதைகளை தாங்களே எடுத்து வைக்கமுடியவில்லை. இரண்டு போகம் கிழங்கு சாகுபடி செய்த போதிலும், விதை எடுத்து வைத்தால் அதில் பூச்சி இருக்குமோ என்ற பயத்தினால், விவசாயிகள் விதைகளை எடுத்து வைக்க முடிவதில்லை. தொடர்ந்து இன்னும் ஒரு ஆண்டுக்கு விதைகள் அவர்களுக்குக் கொடுக்கப்படவில்லையென்றால், நீலகிரியில் உருளைக்கிழங்கு விவசாயமே அடியோடு கெட்டுவிடும். ஆகவே, மத்திய சர்க்காரில் கேட்டு 'பாரின் எக்ஸ்சேஞ்ச்' அதிகமாக வாங்கி அதிகமாக விதைகளை வழங்க சர்க்கார் முயற்சி செய்வார்களா ?

**THE HON. SRI P. KAKKAN :** கனம் அங்கத்தினர் சொல்கிறபடி அரசாங்கம் அக்கறை காட்டிக்கொண்டுதான் வருகிறது. இந்தியன் பொடாடோ ரிஸர்ச் இன்ஸ்டிட்யூட் அதிகாரிகளையும், மற்ற இலாகா அதிகாரிகளையும் வைத்து அதிகப்படியான விதைகளை விவசாயிகளுக்குக் கொடுக்க வழிவகை செய்யப்படுகிறது. நீலகிரியில் மட்டுமின்றி, சிம்லாவிலும், இதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுவருகின்றன.

*Government Forests (Fire accidents)*

*** 32 Q.—SRI J. MATHA GOWDER :** கனம் கூட்டுறவு அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நீலகிரியில், கிராமங்களுக்கு அருகாமையில் உள்ள அரசாங்கக் காடுகளில் அடிக்கடி தீ விபத்து ஏற்படுவதால் கிராம மக்கள் பயப்படுவது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

**THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR :** The Government are aware of the incidence of forest fires near villages, usually caused by local incendiarism. These fires are not allowed to spread and affect any village holdings. The Government are not aware that the villagers are afraid about these fires. They have not received any represenation.

*** 33 Q.—SRI J. MATHA GOWDER :** கனம் கூட்டுறவு அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சமீபத்தில் பார்சன்ஸ் பள்ளத்தாக்கு காட்டில் தீ அணைக்கச் சென்று மூன்று காட்டிலாகா சிப்பந்திகள் மரணமடைந்தது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

(இ) இந்த விபத்து எப்படி ஏற்பட்டது ?